# முன்னுரை

சிறீலங்கா அரசின் பாடத்திட்டத்தின் கீழ் பள்ளிகளில் இதுவரை கற்பிக்கப்பட்டு வரும் வரலாற்றுப்பாடநூல்கள் உண்மையான வரலாறாக அமையாமல் சிங்கள இனத்தை மேன்மைப்படுத்தக்கூடிய வகையிலே மிகைப்படுத்தியும், தமிழ்மக்கள் பெருமைகளை மறைத்தும், தமிழ்மக்களை இழிவு படுத்தும்வகையிலே திரித்தும் எழுதப்பட்டுள்ளன.

இந்தநாடு சிங்கள பௌத்தர்களுக்கு மட்டும் உரியநாடென்றும் அவர்களது வரலாறே ஈழத்து வரலாறென்றும் சிங்களவரால் சிங்களவர்களுக்காகச் சிங்கள மொழியில் எழுதப் பட்ட ஆக்கங்களின் தமிழ் மொழி பெயர்ப்பே தமிழ்மாணவர்களுக்கு ஈழத்து வரலாறெனக் கற்பிக்கப்பட்டுவருகிறது.

சிறப்பும் மேன்மையும் மிக்க வரலாற்றைக்கொண்ட இனம் அந்த வரலாற்றாற் பெருமையடைகிறது. அத்தகைய வரலாறு அந்த இனத்தின் வளர்ச்சிக்கு வழிகாட்டுகிறது. பெருமை மிக்க பண்டைய வரலாற்றைக்கொண்ட ஈழத்தமிழினத்தின் இன்றைய மாணவர்கள் தமது வரலாற்றைக் கற்பதும் தெரிந்துகொள்வதும் அதனூடாக அவர்கள் வளர்ச்சியைப் பெறுவதும் சிங்கள ஆட்சியாளரால் திட்டமிட்டு மறுக்கப்படுகிறது. அதுமட்டுமன்றி, ''உனது இனம் இந்த மண்ணை ஆக்கிரமிக்க வந்த இனம், இந்த மண்ணில் அக்கிரமம் புரிந்த இனம், கள்ளத்தோணியில்வந்த இனம், அடிமை இனம்'' எனத் தமிழினத்தை இழிவுபடுத்துகின்றன. பொய்யான வரலாறு தமிழ்மாணவர்களுக்குப் புகட்டப் படுகிறது.

இத்தகைய கல்வியினால் தமிழ்மாணவர்கள் தன்னம்பிக்கையோ நாட்டுப்பற்றோ அற்றவர்களாக வாழும் நிலை இருந்துவருகிறது. இனத்துக்கு வழிகாட்டும் வரலாற்றுக் கல்விக்கு இந்த நிலை என்றால் சமூகவாழ்க்கையை நெறிப்படுத்தும் நோக்கோடு சிறீலங்கா அரசால் கற்பிக்கப்படும் சமூகக்கல்வியினூடாகத் தமிழ்மாணவர்கள் தமது நாட்டின் நீர்வளநிலவளங்களையோ சமூக அறிவையோ வாழ்க்கையை நெறிப்படுத்தக்கூடிய அறிவையோ பெற முடியவில்லை. தமிழினம் சிங்களவர்க்கு அடங்கி அடிமையாக வாழ வைப்பதற்கேற்ற வகையிலேயே சமூகக்கல்விபாடத்திட்டம் பாடப்பரப்புகள் திட்டமிடப் பட்டு ஆக்கப்பட்டு உள்ளன.

எனவேதான் இன்றைய வரலாறு சமூகக்கல்வி பாடங்களில் தமிழ்மாணவர்களுக்கு நாட்டமோ ஆர்வமோ ஏற்படவில்லை. தேர்வுகளில் புள்ளி பெறுவதற்கென்ற ஒரே நோக்கிலேயே இப்பாடங்களைத் தமிழ்மாணவர்கள் படிக்கின்றனர்.

தமிழ்மாணவர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டக்கூடியதாகவும் சமூகவாழ்வை நெறிப் படுத்தக்கூடியதாகவும், பொதுத் தேர்வுகளுக்கு ஊறுநேராத வகையிலும் 6, 7, 8 ஆம் ஆண்டு மாணவர்களுக்கு, ''சமூகக்கல்வியும் வரலாறும்'' என்ற பாடநூலினூடாகச் சில பாட அலகுகளைச் சமூகக்கல்வி மன்றம் ஆக்கித்தந்திருக்கிறது.

இந் நூலை மாணவர்கள் துடிப்போடும், ஆர்வத்தோடும் கற்று அறிவையும் பயனையும் பெறவேண்டும் என்பதே எமது எதிர்பார்ப்பும் வேணவாவுமாகும்.

— சமூகக் கல்வி மன்றம் —

# தேசியப் பண், — தேசியக்கொடி — தேசியக் கோட்குறி

பல்வேறு இறை நெறிகளைக் (மதங்களை) கடைப்பிடித்து வருகின்ற போதிலும் பேசுகின்ற மொழியால் ஒன்றுபட்டவர்களாக வாழும் தமிழீழ மக்கள் தமிழீழத் தேசிய இனத்தவர்களாவர்.

எமது நாட்டை உலகில் உயர்ந்த நிலைக்குக் கட்டியெழுப்பவேண்டும் என்ற நாட்டுப்பற்றும், தமிழினத்தின் தனித்தன்மைகளைப் பேணி வாழும் உணர்வும் எமது நாட்டவர்கள் அனைவரும் ஒற்றுமையாக ஏற்ற முற வளரவேண்டுமென்ற தேசிய உணர்வும் பெறுவதற்கு தேசியப்பண், தேசியக்கொடி, தேசியக் கோட்குறி (இலச்சினை) என்பன முதன்மை யானவை; இன்றியமையாதவை.

**தேசியப் பண்**

நாட்டின் தேசிய வளங்கள், நாட்டு மக்களின் சிறப்பியல்புகள், பண்புகளைத் துலங்கவைத்து நாட்டினதும் மக்களினதும் பெருமைகளைப் பறைசாற்றி தேசிய உணர்வை தேசிய ஒற்றுமையை வளர்க்கின்ற வகையிலே தேசியப்பண் அமையும்.

புதிதாக உருவாகி வரும் தமிழீழத்துக்கு இதுவரை முழுமையான தேசியப்பண் ஆக்கப்படவில்லை. ஆயினும் பாவலர் (கவிஞர்) புதுவை இரத்தினதுரை அவர்களால் ஆக்கப்பட்ட ''ஏறுதுபார் கொடியேறுது பார்...'' என்ற எமது தேசியக்கொடியின் பெருமையைப் பறைசாற்றும் கொடிவணக்கப்பண், எமது தேசியக் கொடி ஏற்றப்படுகின்ற பொழுதுகளில் பாடப் பட்டு வருகின்றன.

கொடிவணக்கப் பண்

ஏறுதுபார் கொடி ஏறுதுபார்
ஏறுதுபார் கொடி ஏறுதுபார் - இங்கு
ஏறுதுபார் கொடி ஏறுதுபார் - தமிழ்
ஈழத்தின் வேதனை தீர்த்தகொடி
எட்டுத்திக்கிலும் மானத்தைச் சேர்த்தகொடி
காலத்தை வென்றுமே நின்றகொடி - புலி
காட்டிய பாதையில் சென்றகொடி (ஏறுதுபார்)

செக்க நிறத்திலே வேங்கை நடுவிலே
சீறிடும் கொடியிது - தமிழ்
மக்களைக்காத்த நம்மான மாவீரரை

வாழ்த்திடும் கொடியிது - புலி
வீரத்தின் கொடியிது
மாவீரனின் கொடியிது (ஏறுதுபார்)

எத்தனை எத்தனை வேங்கைகள் ரத்தத்தில்
ஏறிய கொடியிது - பெரும்
சத்திய வேள்வியில் செத்தவர் மீதினில்
சாற்றிய கொடியிது - தமிழ்
ஈழத்தின் கொடியிது - புலி
ஏந்திய கொடியிது (ஏறுதுபார்)

சாதிகள் சண்டைகள் சாய்த்துவிழுத்திய
சாதனைக் கொடியிது - சங்கு
ஊதி முழங்கிட ஊர்மனையாவிலும்
உலவிய கொடியிது - சம
தர்மத்தின் கொடியிது எங்கள்
தாயவள் கொடியிது (ஏறுதுபார்)

ஆயிரமாயிரம் பேரென வேங்கைகள்
ஆக்கிய கொடியிது - பிர
பாகரன் என்றிடும் காவியநாயகன்
போற்றிடும் கொடியிது - தமிழ்த்
தேசத்தின் கொடியிது - எங்கள்
தேசியக் கொடியிது (ஏறுதுபார்)

பயிற்சி:

1. மாணாக்கர் ஒவ்வொருவரும் இசை ஆசிரியரின் உதவியோடு எமது தேசியக் கொடி வணக்கப்பண்ணை அதற்குரிய பண்ணோடு பாடப் பயில வேண்டும்.

2. எமது தேசியக் கொடி வணக்கப்பண் யாரால் ஆக்கப்பட்டது?

3. தேசியக் கொடி வணக்கப் பண்ணில் குறிப்பிடப்படும் கருத்துக் களை மாணாக்கர் தமக்குரிய நடையில் எழுதுக?

4. தேசியக் கொடி வணக்கப்பண் பாடப்படும் பொழுதுகள் எவை?

5: தேசியக் கொடி வணக்கப்பண் பாடப்படும்போது எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதை ஆசிரியரூடாக மாணாக்கர் தெரிந்து வைத்திருத்தல் வேண்டும்.

**தேசியக் கொடி**

ஒரு நாட்டின் தேசிய இனங்கள், நாட்டு மக்களின் பண்புகள் ஆட்சி, இறைமை உட்பட அந்த நாட்டைக் குறிக்கின்ற ஒட்டுமொத்தமான பொது உருவாகத் (சின்னமாக) தேசியக் கொடி விளங்குகின்றது:

நாட்டைப் போற்றி வணங்குவதற்கீடாகத் தேசியக் கொடிக்கு வணக்கஞ் செலுத்தப்படுகின்றது. தேசியக்கொடியை வணங்குவது நாட்டை வணங்குவது போலாகும்.

நாட்டின் தலைவர்களைவிட, படை, ஆட்சி என்பவற்றைவிட உயர்ந்ததாகத் தேசியக் கொடி மதிக்கப்படுகின்றது. எனவேதான் எந்த ஒரு நாட்டிலும் எந்தச் சிறப்பு நிகழ்வுகளின்போதும் நாட்டின் தலைவர், படை, அரசலுவலர், குடிமக்கள் அனைவரும் கொடிவணக்கஞ் செய்கின்றனர்.

தேசியக் கொடிக்கு வழங்கப்படுகின்ற மதிப்பு, சிறப்பு என்பன அந்த நாட்டைச் சென்றடைகின்றன. அது போன்றே தேசியக் கொடிக்கு ஏற்படுத்தப்படும் இழிவு, புறக்கணிப்பு என்பனவும் அதன் நாட்டைச் சென்றடையும். எனவேதான் தேசியக்கொடிக்கு ஏற்படுத்தப்படும் இழிவு பெருங் குற்றமாகக் கருதப்பட்டு அக்குற்றத்துக்குக் கடும் ஒறுப்பு (தண்டனை) வழங்கப்படுகின்றது.

எமது தேசியக் கொடி



எமது தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களால் 1977 ஆம் ஆண்டு, விடுதலைப் புலிகள் இயக்கத்துக்கென உருவாக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு வந்த புலிக்கொடியில் இருந்த எழுத்துக்கள் நீக்கப்பட்டு தமிழீழத்தின் தேசியக்கொடியாக 1990 ஆம் ஆண்டு தேசியத் தலைவர் அவர்களால் அறிவிக்கப்பட்டது. 1990 ஆம் ஆண்டு நவம்பர் 21 ஆம் நாள் மாவீரர் ஏழல் தொடக்க நாளன்று முதற்றடவையாகத் தமிழீழத் தேசியக் கொடி எமது தேசியத் தலைவர் அவர்களால் ஏற்றிவைக்கப்பட்டது.

அன்றிலிருந்து தமிழீழத்தில் நடைபெறும் சிறப்பு நிகழ்வுகள் தமிழீழத் தேசியக்கொடி ஏற்றப்பட்டே தொடங்கப்படுகின்றன. தேசியக்கொடி ஏற்றப்படும்போது தமிழீழத் தேசியக்கொடி வணக்கப்பண் பாடப்படுகின்றது.

எமது நாட்டை அமைப்பதற்கான விடுதலைப் போராட்டத்தை வீறு கொள்ளவைத்த, மக்களை விடுதலை இயக்கத்தின்பால் ஈர்த்து அணி திரளவைத்த தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கோட்குறியான (இலட்சினையான) பாயும் புலியே எமது தேசியக்கொடியின் நடுவில் அமைந் திருக்கிறது.

எமது தேசியக்கொடியை மஞ்சள், சிவப்பு, கறுப்பு, வெள்ளை ஆகிய நான்கு நிறங்கள் அழகுபடுத்துகின்றன.

ஏற்றத் தாழ்வுகளற்ற, 'வர்க்க', 'சாதிய', முரண்பாடுகளற்ற பெண்ணடிமைத்தனமற்ற புரட்சிப்பாங்கான அரசியல் இலக்கைச் சிவப்பு நிறம் குறியீடு செய்கின்றது.

கரடுமுரடான, சாவும் அழிவும் தாங்கொணாத் துன்பங்களும் நிறைந்த வழிக்கூடாகச் சென்று எமது இலக்கை அடைவதற்கு வேண்டிய உருக்குப் போன்ற உள்ள உறுதியைக் கறுப்பு நிறம் குறித்துக்காட்டுகின்றது.

அமைப்பினதும் போராட்டத்தினதும் தூய்மையை, நேர்மையை வெள்ளை நிறம் வெளிப்படுத்தி நிற்கின்றது.

எமது தேசியக் கொடியை நாம் எமது உயிரிலும் மேலாகப் போற் றிப் பேணிக்காப்பது எமது தலையாய கடமையாகும்.

பயிற்சி:

1. எமது தேசியக் கொடியின் படத்தை வரைக.
2. தேசியக் கொடியில் இருக்கும் நிறங்கள் யாவை?
3. அந்நிறங்கள் எவற்றைக் குறிக்கின்றன?
4: எமது தேசியக் கொடியை முதன்முதல் ஏற்றியவர் யார்?
5. எமது தேசியக் கொடியை ஆக்கியவர் யார்?
6! எமது தேசியக் கொடி ஏற்றப்படும்பொழுது நாம் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்?

**தேசியக் கோட்குறி (இலட்சினை)**

தேசியக் கோட்குறி என்பது அரச உரிமையை எடுத்துக் காட்டும் தேசிய அடையாளமாகும். அரச செயற்பாட்டு அறிவிக்கைகள் வெளியீடுகள் அனைத்திலும் இந்தத் தேசியக் கோட்குறி பயன்படுத்தப்படும்.

தமிழீழ அரசை அமைத்துக்கொண்டதும் நாம் எமக்கெனத் தமிழீழ அரச கோட்குறி ஒன்றை அமைத்துக்கொள்வோம்,

# தமிழீழ நாடும் விடுதலைப் போராட்டமும்

இந்துமாகடலில் அமைந்துள்ள இலங்கைத்தீவின் வடக்கு கிழக்குப் பகுதி களையும் வடமேல் பகுதியையும் உள்ளடக்கிய 20,000 சதுர கிலோமீற் றர் பரப்பளவைக் கொண்ட நிலப்பகுதியே தமிழீழமாகும்.

தமிழீழப் பகுதி வரலாற்றுக் காலத்திலிருந்து தமிழ்மக்கள் வாழ்ந்து வரும் பகுதியாகும்; நீண்ட நெடுங்காலமாகத் தமிழ் மன்னர்களாலே தனி யாட்சி நடத்தப்பட்டுவந்த பகுதியாகும்.

வாணிப நோக்கோடு போர்த்துக்கல் நாட்டவர் இலங்கைத் தீவிற்கு முதன்முதலில் வருகை தந்தபோது (1505 ஆம் ஆண்டில்) தமிழீழப் பகுதி யில் யாழ்ப்பாணத் தமிழரசும் மலையகப் பகுதியிற் கண்டிச் சிங்கள அரசும் தெற்கு தென்மேற்குப் பகுதிகளில் கரையோரச் சிங்கள அரசும் இருந்து வந்தன.

சிங்கள மன்னர் குடும்பப் பகைகளினால் எழுந்த உள்நாட்டுக் குழப் பங்களினாலும், அவர்களின் ஒரு பிரிவினர் போர்த்துக்கேயரின் உதவியை நாடியதாலும் போர்த்துக்கேயர் உள்நாட்டு அரசியலிலே தலையிட்டுக் கரை யோரச் சிங்கள அரசான கோட்டை அரசைக் கைப்பற்றினர்.

அதைத் தொடர்ந்து இலங்கைத்தீவில் இருந்த மற்றைய அரசுகளையும் கைப்பற்றும் எண்ணத்தோடு அவர்கள் பல சூழ்ச்சிகளையும் முயற்சிகளையும் மேற்கொண்ட போதிலும் யாழ்ப்பாணத்தைத் தமிழ் அரசு நூறாண்டுக்கும் மேலாக அச்சூழ்ச்சிகளையும் முயற்சிகளையும் முறியடித்து, தனது ஆட்சியைக் தொடர்ந்தும் நிலைநிறுத்தி வந்தது.

ஆயினும் உள்நாட்டு இன இரண்டகர் (துரோகி) களினது காட்டிக் கொடுப்புக்களினாலும் சிங்களக் கைக்கூலிகளின் உதவியினாலும் யாழ்ப் பாணத் தமிழரசு 1619 ஆம் ஆண்டு போர்த்துக்கேயரினாற் கைப்பற்றப் பட்டது. ஆயினும் இயற்கைக் காப்பு அரண்களைக் கொண்ட மலையகப் பகுதிக் கண்டியரசும் வன்னிக் காட்டுப்பகுதிகளை உள்ளடக்கிய தமிழ்க் குறு நில மன்னர்களது குறுநில அரசுகளும் போர்த்துக்கேயருக்கோ அவர்கள் பின் வந்த ஒல்லாந்தருக்கோ ஆங்கிலேயருக்கோ அடங்காது தமது ஆட்சியைத் திறம்பட நடத்திவந்தன.

19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வன்னியை ஆண்ட பண்டார வன்னியன் என்ற தமிழ் மன்னன் தன்னிடம் திறைகேட்டு வந்த ஆங்கிலே யரின் படைகளை எதிர்த்துப் பல போர்களை நடத்தி 1811 ஆம் ஆண்டில் வீரச்சாவைத் தழுவினான்.

அதன்பின் இலங்கைத்தீவு முழுவதையும் ஆங்கிலேயர் கைப்பற்றியபோதும் தாம் கைப்பற்றிய ஆட்சிப்பகுதிகளைத் தனித்தனியேதான் ஆண்டுவந்தனர்.

1833 ஆம் ஆண்டில் தமிழ் சிங்கள ஆட்சிப்பகுதிகளை ஒன்றிணைத்து ஒரே அரசின் கீழ் 115 ஆண்டு காலம் ஆட்சி நடத்திய ஆங்கிலேயர், 1948 ஆம் ஆண்டு டி. எஸ். சேனநாயகா தலைமையிற் சிங்களவரிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துச் சென்றனர்.

அதன்பின் சிங்கள ஆட்சியாளரால் தமிழ்மக்களது குடியுரிமை, மொழியுரிமை, கல்வியுரிமை, வாழ்வுரிமை என்பன மறுக்கப்பட்டுத் தமிழ் மக்கள் இரண்டாந்தரக் குடிமக்களாக அடிமைகளாக நடத்தப்பட்டதால், தமிழ் மக்கள் தமது உரிமைகளுக்காகக் குரல் கொடுத்து அமைதி வழியில் போராடத் தலைப்பட்டனர்.

தமிழ்மக்களது அமைதி வழிப் போராட்டங்கள் ஆயுதப்படைகளினால் நசுக்கப்பட்டதைத் தொடர்ந்து ஆயுதமேந்திய தமிழீழ விடுதலைப் போராட்டம் 1972 ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்றுவருகின்றது.

தமிழீழத்தில் இந்து, கிருத்துவ நெறிகளை (மதங்களை) ப் பின்பற்றும் தமிழ்மக்களும் இஸ்லாமிய நெறியைப் பின்பற்றும் தமிழ்பேசும் முஸ்லிம் மக்களும் என 25 இலட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் வாழ்ந்து வருகின்றனர்.

**செயற்பாடுகள்:-**

1. தமிழீழ நிலப்பரப்பில் வரலாற்றுக் காலத்திலிருந்து வாழ்ந்துவரும் இனத்தவர் யார்?
2. போர்த்துக்கேயர் வருகையின்போது தமிழீழப் பகுதியில் நிலவிய அரசு எது?
3. தமிழீழத்தின் பரப்பளவு எவ்வளவு?
4. நீண்ட காலமாகத் தனித்தனியே இருந்துவந்த ஆட்சிப் பகுதிகளை ஆங்கிலேயர் ஒன்றிணைத்தது எந்த ஆண்டில்?
5. தமிழ் மக்களிடமிருந்து பறிக்கப்பட்ட உரிமைகள் எவை?
6. எந்த ஆண்டில் ஆயுதமேந்திய தமிழீழ விடுதலைப் போராட்டம் தொடங்கப்பட்டது?

# இலங்கையின் முதற் குடிகள்

இலங்கையின் முதற் குடிகள் பற்றிப் பௌத்தநெறி வரலாற்றைக் கூறும் பாளி நூல்களாகிய மகாவம்சம் தீபவம்சம் ஆகியவற்றிற் கூறப்பட்டுள்ளன. இக்குடிகள் பற்றிய செய்திகள் இரு வகையான பண்பாட்டுப் படைகளாகப் பின்வருவோர் பற்றிய கட்டுக்கதைகளினூடாக விளக்கப்பட்டுள்ளன.

1. ''அமானுஷ்யர்களான, நாகரீக மற்றநிலையில் வாழ்ந்த இந்நாட்டின் பண்டைக் குடிகளாகிய இயக்கர்களும், நாகர்களும்.

2. இந்நாட்டிற்கு நாகரிகத்தைப் புகுத்திய விஜயனும் அவனது வழிவந்தோரும்.

இவற்றில் முதலாவது பண்பாட்டுப் படைக்குரிய மக்கட் கூட்டத்தினர் பற்றிய சான்றுகள் புத்தர் இந்நாட்டிற்கு மேற்கொண்ட மூன்று வருகைகள் பற்றிய கதைகளிற் காணப்படுகின்றன. இவ்வருகைகளின்போது முதலில் மகியங்கனையில் வாழ்ந்த இயக்கர்களையும் இரண்டாம் மூன்றாம் வருகைகளின்போது நாகதீபம், கல்யாணி (களனி) ஆகிய பகுதிகளிலே வாழ்ந்த நாகர்களையும் புத்தர் வெற்றி கொண்டதாகக் கூறப்படுகிறது.

இயக்கர்களை வென்று அவர்களின் இனத்தைச் சேர்ந்த குவேனியை விஜயன் மணக்க, இவர்களுக்கு ஒரு ஆணும் ஒரு பெண்ணுமாக இரு பிள்ளைகள் பிறந்தனர் என்றும் இவர்களின் வழித்தோன்றல்களே புலிண்டர்கள் என்றும் மகாவம்சம் குறிப்பிடுகிறது. இராமாயணம் போன்ற காவியங்களில் இலங்கையின் பண்டைக் குடிமக்கள், ஆரிய வீரனான இராமனின் முன் இராட்சதர்களாக விளிக்கப்பட்டுள்ளமை போன்றே இத்தகைய கதைகளும் அமைந்துள்ளன.

விஜயனின் கதை பின்வருமாறு மகாவம்சத்திற் கூறப்பட்டுள்ளது. வங்க நாட்டு அரசன் கலிங்க நாட்டு இளவரசியை மணந்தான். இவர்களுக்கு ஒரு மகள் இருந்தாள். அவள் சிங்கத்தோடு கொண்ட உறவால் சீகவாகு (சிங்கவாகு) சீகவல்லி (சிங்கவல்லி) என்ற ஆண், பெண் குழந்தைகள் இருவரைப் பெற்றெடுத்தாள். 16 அகவை நிரம்பிய சிங்கவாகு தங்கையுடனும் தாயுடனும் சிங்கத்தின் குகையைவிட்டு வெளியேறி வங்கநாடடைந்தான். மனைவியையும் பிள்ளைகளையும் பிரிந்த சிங்கம் துன்பமேலீட்டினாலே குழப்பம் விளைவித்தது. குழப்பம் விளைவித்த சிங்கத்தைக் கொல்வோருக்குப் பரிசு வழங்கப்படும் என மன்னர் அறிவிக்க, சிங்கவாகு தனது தந்தையாகிய சிங்கத்தைக் கொன்றான். இதன் பின்னர் தனது தங்கையாகிய சிங்கவல்லியை

மணக்க இருவருக்கும் 16 இரட்டைப் பிள்ளைகள் பிறந்தனர். இப்பிள்ளைகளில் மூத்தவன் விஜயன் அடுத்தவன் சுமித்த ஆவான்.

விஜயனும் அவனது தோழர்களும் நாட்டின் குடிமக்களுக்குத் துன்பம் விளைவித்ததால் விஜயனும் அவனது 700 தோழர்களும் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டனர். இவர்கள் புத்தர் உலக வாழ்வை நீத்த (சமாதியடைந்த) அன்று கி. மு. 483 இல் (கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில்) இலங்கையை அடைந்தனர். இலங்கைக் கரையை அடைந்த இவர்கள் களைப்பு மேலீட்டினால் நிலத்தில் கையூன்றியபோது இவர்களின் கைகள் தரை மண்ணின் நிறத்தாற் செந்நிறம் அடைந்ததால் தம்பபண்ணி (தம்ப - செந்நிற பாணி - கைகள்) என அவ்விடம் அழைக்கப்பட்டது. பின்னர் இவ்விடப் பெயர் நாட்டுக்கும் வழங்கப்பட்டது. அத்துடன் சிங்கத்தைக் கொன்ற சிங்கபாகுவின் வழிவந்த விஜயனின் வழித்தோன்றல்கள் சீகள (சிங்கள) சிங்களவர் என அழைக்கப்பட்டதாக மகாவம்சம் குறிப்பிடுகிறது.

பின்னர் இயக்கர் இனப் பெண்ணாகிய குவேனியையும் அவளது பிள்ளைகளையும் விஜயன் கைவிட்டபின் இயக்கர்களை விஜயனுக்குக் காட்டிக் கொடுத்தமைக்காகக் குவேனி இயக்கர்களாலே கொல்லப்பட, அவளின் பிள்ளைகள் நாட்டின் நடுப்பகுதிக்குச் சென்று ஒளிந்துகொண்டனர். சத்திரிய குல மரபுக்கேற்ப முடிசூடுவதற்கு முன் சத்திரியப் பெண்ணை மணந்து கொள்ள விஜயன் மதுரையில் பாண்டிய மன்னனுக்குத் தூதனுப்பி அவனின் மகளை வரவழைத்து மணந்துகொள்ள, அவளுடன் வந்த 700 பாண்டி நாட்டுத் தோழியர்களும் விஜயனது தோழர்களது மனைவியராயினர். விஜயனின் தோழர்களான அமைச்சர்களின் பெயரில் உபதிஸ்ஸ, அனுரா, உஜ்ஜனி, உருவெல, விஜித, ராம, தீகாயு, உரோகண ஆகிய குடியேற்றங்கள் அமைக்கப்பட்டதாக மகாவம்சம் கூறுகிறது.

தம்பபண்ணியைத் தலைநகராகக் கொண்டு விஜயன் ஆட்சி செய்தான் என்றும் அவனுக்குப் பிள்ளைகள் இல்லாததால் அவனது 38 ஆண்டு ஆட்சிக்குப்பின் அவனது தம்பி சுமித்தாவின் மகனாகிய பாண்டு வாசுதேவவும் அவன் வழிவந்தோரும் மன்னராயினர். கி. மு. நான்காம் நூற்றாண்டில் பாண்டுகாபயன் அனுராதபுரத்தைத் தலைநகராக்கி அரசாண்டான். இம்மன்னன் பற்றிய வரலாறும் ஐதீகம், கட்டுக்கதைகள் (கம்சன் - கிருஷ்னன் கதைபோன்று) ஆகியன சேர்ந்த ஒன்றாகவே காணப்படுகின்றது.

விஜயனின் கதை கட்டுக்கதை என்பதைப் பெரும்பாலான வரலாற்றாசிரியர்கள் ஏற்றுக்கொண்ட போதிலும் ஒருசில வரலாற்றாசிரியர்கள் வடஇந்தியாவிலிருந்து சிங்களவர்களின் முன்னோடியர்கள் சிலர் வருகைதந்ததாகவும் அவர்களே இலங்கை மண்ணில் நாகரிகத்தைப் புகுத்தியதாகவும் கூறுகின்

றனர். இதற்குச் சான்றாக மகாவம்சத்தில் விஜயனின் கதையிற் 'காணப்படும் இடப்பெயர்களையும் தற்காலச் சிங்கள மொழிக்கும் வட இந்திய மொழிகளுக்குமிடையே நிலவும் ஒற்றுமையையும் எடுத்துக்காட்டியுள்ளனர்.

ஆனால் விஜயனின் கதை இந்நாட்டுக்கு நாகரிகத்தைப் புகுத்தியவர்களாக நம்பப்பட்ட சிங்கள மக்களின் மூதாதையினரின் கதை அல்ல என்றும், இது பௌத்த பிக்குமாரால் அவர்கள் அறிந்திருந்த ஜாதகக் கதைகளை மையமாக வைத்துப் பின்னப்பட்டது என்றும் மெண்டிஸ் என்ற வரலாற்றறிஞர் எடுத்துக்காட்டியுள்ளார். இவ்வாறே பாண்டுகாபயன் கதையும் ''கரிவம்சம்'', ''கட ஜாதக'' போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டே உருவாக்கப்பட்டது எனவும் எடுத்துக்காட்டியுள்ளார்.

கடந்த கால் நூற்றாண்டுகளாக மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகள் இந்நாட்டு முதற்குடிகள் பற்றிப் பாளி நூல்கள் கூறிய தகவல்கள் தவறானவை என்பதை எடுத்துக்காட்டியுள்ளன.

பண்டைய குடிகளான இயக்கர்களும் நாகர்களும் அமானுஷ்யர்கள் அல்லரென்றும் இந்நாட்டிற்குரிய கற்கால மனிதர்களே இவர்கள் என்பதையும் இரத்தினபுரி, பலாங்கொடை போன்ற இடங்களிற் கிடைத்த மனித எலும்புக் கூடுகளும் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் கிடைத்த கற்கருவிகளும் உறுதிசெய்துள்ளன. இவற்றினால் இலங்கையில் இம்மக்கள் நூற்றைம்பதாயிரம் (150, 000) ஆண்டுகளுக்கு முன்னரே வந்தனர் என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இக்கற்காலப் பண்பாட்டில் இரு கூறுகள் உள்ளன. முதலாவது பழைய கற்காலம். இக்காலக் கருவிகளாகக் கல்லினாலான கைக்கோடரிகள் விளங்கின. மற்றது, இடைக் கற்காலம் அல்லது குறுணிக் கற்காலமாகும். சிறுகற்களின் பல்வேறு வடிவங்களிலமைந்த கற்கருவிகளைப் பயன்படுத்தி வேட்டையாடுதல், கிழங்கு வகைகளைக் கிண்டியெடுத்தல் போன்ற பொருண்மிய (பொருளாதார) நடவடிக்கைகளில் இம்மக்கள் ஈடுபட்டனர்.

மேற்கூறிய மக்கள் நாகரிகமற்ற நிலையில் வாழ்ந்தவராவர். இவர்கள் மீது நாகரிகத்தைப் புகுத்திய மக்களின் தொல்லியற்சான்றுகளாக எலும்புக் கூடுகள், மட்பாண்டங்கள் கன் (உலோகக்) னிலாலான கருவிகள் போன்றன நாட்டின் பல பகுதிகளிலும் மேற்கொள்ளப்பட்ட அகழ்வுகளிலிருந்து கிடைத்துள்ளன. இப்பண்பாட்டுக்குரிய மக்கள் இறந்தோரைத் தாழிகளில் அடைத்து நிலத்திற் பறித்த குழிகளில் அடக்கஞ் செய்தனர். ஈம அடக்க முறைகளான கல்லறைகள் கல்மேசைகள் ஆகியவற்றை அமைப்பதற்குப் பெரிய கற்களை இவர்கள் பயன்படுத்தியதால் பெருங்கற்காலப் பண்பாடு என இது அழைக்கப்பட்டது. குளங்களிலிருந்து நீர்பாய்ச்சல், நெல் உண்டாக்குதல் (உற்

பத்தி) மந்தை வளர்ப்பு, கறுப்பு, சிவப்பு நிறங்களிலான மட்கலங்கள் ஆக்குதல் ஆகியவை இதன் சிறப்பியல்புகளாக விளங்கின. இதனால் இப் பண்பாட்டில் மக்களின் வாழ்விடங்கள், ஈமத் தாழிகள், கல்லறைகள், குளங்கள், வயல்கள் ஆகியன முதன்மை பெற்றன. மக்களின் வாழ்விடங்களான கந்தரோடை, அனுராதபுரம், மாந்தை, திஸ்ஸமகாராம ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள் இப்பண்பாட்டின் ஒருமைப்பாட்டினை உறுதிசெய்துள்ளன. ஈமப் பொருட்கள்கூடப் பல வகைப்படும். தாழிகள் சுற்றிட்டைகள், கல்மேசைகள், கல்வட்டங்கள், நீளக்கிடத்தி அடக்கம் செய்வதற்கான பொருட்கள் என்பன இவற்றுட் சிலவாகும். புத்தளம் மாவட்டத்திலுள்ள பொம்பரிப்பு இலங்கையில் உள்ள புகழ்பூத்த தாழிக்காடாகும். அனுராதபுர மாவட்டத்திலுள்ள குருகல்கின்ன, திவுல்வேவ, கொக்காபே போன்ற இடங்களிற் சுற்றிட்டை வகையைச் சேர்ந்த ஈமப் பொருட்கள் (சின்னங்கள்) உள. ஆனைக்கோட்டை, மாந்தை போன்ற இடங்களில் இறந்தோரை நிலத்திற் பறித்த குழிகளில் அடக்கஞ் செய்ததற்கான சான்றுகள் உள.



வவுனியா மாமடுவில் காணப்பட்ட கல்வட்டம்

மேற்கூறிய தொல்லியற் சான்றுகள் தென்னிந்தியாவிற் காணப்படும் இதே பண்பாட்டுக்குரிய தொல்லியற் சான்றுகளை ஒத்துக் காணப்படுகின்றன. இவற்றைத் தான் தமிழ்மொழியிலுள்ள சங்க இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன. இப்பண்பாடு தென்னிந்தியாவிலே கி மு. 1000 ஆண்டுக்கு முன்னரே வளர்ச்சியடைந்து இலங்கையிலும் பரவியிருந்ததை இச்சான்றுகள் உறுதி செய்வதால், பாளி நூல்கள்கூறும் கி.மு 500இற்குப் பின்னர் வந்த விஜயனும் அவனது ஆட்களும் வட இந்தியாவிலிருந்தே ஈழத்துக்கு நாகரிகத்தையும் பண்பாட்டையும் கொண்டுவந்தனர் என்பது ஒரு கட்டுக்கதை என்பது உறுதியாகியுள்ளது. அதனுடன் பொம்பரிப்பு, மாந்தை போன்ற இடங்களிலே கிடைத்த எலும்புக் கூடுகளை ஆராய்ந்த அறிஞர் இலங்கையின் பெருங்கற்காலப் பண்பாட்டுக்கு உரியவர்கள்



பொம்பரிப்பில் கண்டெடுத்த ஈமத்தாழி.

தென்னிந்தியாவில் உள்ள தமிழர்களின் மூதாதையினர் என்பதை எடுத்துக் காட்டியுள்ளனர்.

இதனால் இலங்கையில் இன்று தமிழ் - சிங்கள மொழிகளைப் பேசுவோர் பெருங்கற்காலப் பண்பாட்டின் வழிவந்தவர்களே என்பது தெளிவாகின்றது. சிங்களமொழியின் மூதாதை மொழியாகிய எலு, பௌத்தத்துடன் வந்த பாளி மொழியின் செல்வாக்காலே தற்காலச் சிங்கள மொழியாக உருமாறியது போன்று தமிழ்மொழி உருமாறவில்லை. பௌத்தம், சிங்கள - தமிழ் மொழி பேசுவோரின் பண்பாடு கூர்மையடைய வழிவகுத்தாலுங் கூட, இன்றும் சிங்கள தமிழ் மொழிகளுக்கிடையே காணப்படும் மொழியியல் ஒற்றுமைகள், பிற பண்பாட்டு ஒற்றுமைகள் ஆகியவை, பௌத்தம் இந்நாட்டிற்குள் புகமுன்னர் இம்மக்கள் பண்பாட்டு அடிப்படையில் ஒன்றாகக் காணப்பட்டனர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன.



மட்டக்களப்பு கதிரவெளியில் காணப்பட்ட கல்மேசை

விஜயன் கதையிற் காணப்படும் சீகள என்ற சொல் ஒரு இனத்தைக் குறிக்கும் சொல்லாக மகாவம்சத்திற் சொல்லப்பட்டாலுங்கூட, நாட்டிற்கு அக்காலத்தில் வழங்கப்பட்ட இச் சீகள என்ற சொல்லுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கமாக சிங்கத்தினைக் கொன்றவனின் வழிவந்தோர் என்ற மகாவம்சக் கூற்றாக அமைந்துள்ளது எனவும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. நாட்டுக்கு வழங்கப்பட்ட இப்பெயர்தான் பின்னர் சிங்கள - தமிழ் பண்பாடுகளில் வேறுபாடுகள் கூர்மையடைய ஒரு இனத்தோடு இணைக்கப்பட்டது.

இதனால் இந்நாட்டின் முதற்குடிகள் பற்றித் தரும் தரவுகள் வெறும் கட்டுக்கதை என்பது உறுதியாகின்றது. மாறாக இந்நாட்டிலே மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகள் ஈழத்தின் பண்டைக் குடிமக்களான இயக்கர்களும் நாகர்களும் கற்கருவிப் பண்பாட்டு வழிவந்தோரே என்பதை எடுத்துக் காட்டியுள்ளன.

இந்நாட்டின் நாகரிக வளர்ச்சிக்கு வித்திட்ட மக்கள் ஈழத்தில் இருந்த, தென்னிந்தியாவிலிருந்து வந்த தமிழ் மக்களே தவிர மகாவம்சம் எடுத்துக்

கூறுவதுபோல வடஇந்தியாவிலிருந்து வந்தவர்கள் அல்லர் என்பது உறுதியாகின்றது.

பயிற்சி:

1. இலங்கையின் முதற்குடிகள் பற்றித் தவறான கதைகளைக் கூறும் பௌத்த நூல்களின் பெயர்கள் இரண்டு தருக?

2 விஜயன் இலங்கைக்கு வருகைதந்ததற்கு முன்னர் புத்தர் மூன்று தடவைகள் இலங்கைக்கு வந்ததாக மகாவம்சம் கூறுகிறது. புத்தர் வந்த இடங்கள் எவை? புத்தர் வரும்போது அந்த இடங்களில் இருந்தவர்கள் யார்?

3. கற்காலப் பண்பாட்டின் இரு கூறுகள் எவை?

4. பெருங்கற்காலத்தில் எமது முன்னோர் இறந்தவர்களின் உடல்களை அடக்கஞ்செய்யப் பயன்படுத்திய ஈமப்பொருள்கள் எவை?

5. நீர் அறிந்த ஈமப்பொருட்களின் படங்களைக் கீறுக?

# எல்லாள மாமன்னன்

எல்லாள மாமன்னனுக்கு முன்பே பல தமிழ் மன்னர்களும் சிங்கள மன்னர்களும் இலங்கையை ஆட்சி செய்துள்ளனர். கி.மு. 237 ஆம் ஆண்டளவில் தேவநம்பியதீசனின் தம்பி - சூரத்தீசனை வெற்றி கொண்ட சேனன், குத்திகன் என்ற இரு தமிழ் மன்னர்கள் இலங்கையைச் சீரோடும் சிறப்போடும் 22 ஆண்டுகள் ஆட்சி செய்தார்கள். அதன்பின் தேவநம்பிய தீசனின் கடைசித் தம்பி அசேலன் ஆட்சியைக் கைப்பற்றினான்.

அனுராதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி நடத்திய அசேலனை கி.மு. 205 இல் படையெடுத்து வெற்றி கொண்ட தமிழ் மன்னன் எல்லாளன் 44 ஆண்டுகள் இலங்கையின் பேரரசனாக ஆட்சிசெய்தான். அவன் இந்து நெறியில் ஒழுகுபவனாக இருந்த போதிலும் பௌத்த நெறியையும் பௌத்த மக்களையும் பெரிதும் மதித்துப் போற்றி வந்தான். அவன் தனது அமைச்சரவையிலும் பௌத்தர்கள் பலரைச் சேர்த்துவைத்திருந்தான்.

அவனது ஆட்சியில் எதிரிகள், நண்பர்கள், உற்றார், உறவினர் என்ற எவ்வகை வேறுபாடுகளுமின்றி நீதியின்முன் எல்லோரையும் சமமாக மதித்து வந்தான். உண்மையையே நம்புகிறவனாகவும் தீயனவற்றைத் தீண்டாதவனாகவும் இருந்துவந்த எல்லாளன், தான் இரவில் உறங்குகின்ற நேரத்திலுங்கூட நீதிகோரி வருபவர்கள் தன்னை அழைத்து முறைப்பாடுகளைச் சொல்வதற்கேற்ற வகையில் தன் படுக்கையறையில் ஒரு அழைப்புமணியை அமைத்திருந்தான்; இடர்பட்டவர்களின் இன்னல்களை உடனுக்குடன் தீர்த்து வைத்தான்.

நாட்டின் நீர்நிலைகளைச் செப்பனிட்டு, பயிர்ச்செய்கைக்கு ஊக்கமளித்து நாட்டின் வளத்தைப் பெருக்குவதில் எல்லாளன் கூடிய அக்கறை காட்டினான். தலைநகருக்கு வடக்கே அவன் கட்டிய பெலிவாவியே இன்றைய வவுனிக்குளமாகும். மேலும் வடபகுதியிலுள்ள பெரிய குளங்களான இரணைமடுக்குளம், பாவற்குளம் என்பவற்றையும் எல்லாளனே முதலில் அமைத்திருக்கவேண்டும் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அவனது ஆட்சியில் நாடு வரங்சி, வறுமையேதுமின்றிச் செழிப்பாகத் திகழ்ந்தது.

புராணங்களிற் குறிப்பிடப்படும் 'சிபிச்சக்கரவர்த்தி' 'மனுநீதிகண்ட சோழன்' ஆகியோருக்கு நிகராகக் குறிப்பிட்டு, தமிழ் மன்னன் எல்லாளனைப் பௌத்த நூலான மகாவம்சமே போற்றிப் புகழ்கிறது.

பசுவின் கன்றை ஊர்தியால் மோதிக்கொன்ற தன் ஒரே மகனை ஊர்தி உருளியின் கீழ் (தேர்ச்சில்லின் கீழ்) வைத்து ஊர்தியை ஏற்றிக் கொன்று

தாய்ப்பசுவுக்கு நீதி வழங்கினர்ன் என்றும், இது போன்றே பாம்பின் வாயில் அகப்பட்ட பறவைக் குஞ்சை மீட்டுத் தாய்ப்பறவையின் துயரைத் துடைத் தான் என்றும், காயவைத்த அரிசி மழையில் நனைந்ததால் தவித்த கிழவிக்கு உதவினான் என்றும் பௌத்தத்தின் பெருமையைப் பறைசாற்றும் மகாவம்சம், தமிழ் மன்னன் எல்லாளனின் நீதி தவறாத ஆட்சி பற்றி எடுத்துக் கூறுகிறது.

அதுமட்டுமன்றிப் பௌத்தத்தின் மரபுகளைக் காத்துவந்த எல்லாள மன்னன் பௌத்தத்தை எவ்வாறு மதித்துப் போற்றினான் என்பதை விளக்கும் நிகழ்வு ஒன்றையும் பின்வருமாறு எடுத்துக் கூறுகிறது.

எல்லாள மன்னன் ஒருதடவை புத்த சங்கத்தினரை அழைப்பதற்குத் தன் ஊர்தியில் சேதியபர்வதத்திற்குச் சென்றுகொண்டிருந்தபோது ஊர்தியின் நுகத்தடி பௌத்தஸ்தூபத்தின்மீது மோதியதில் ஸ்தூபத்தின் சில கற்கள் பெயர்ந்துவிட்டன. அதை உணர்ந்த எல்லாளன் தரையில் படுத்துத்தன் தலைமேல் ஊர்தியை ஏற்றும்படி கட்டளையிட்டான். இங்கு வந்த புத்த பிக்குமார், ''மற்றவர்களுக்குத் தீங்கிழைப்பதைப் புத்த பெருமான் ஏற்க மாட்டார்'' என்று கூறி, தகர்ந்த தூபத்தைக் கட்டுவித்தாற் போதுமானது என்று கேட்டதற்கிணங்க, இடிந்து போன 15 கற்களைப் புதிதாக அமைப்பதற்குப் பதினையாயிரம் பணம் செலவிட்டதுடன் தன்தவறுக்கு மன்னிப்புக் கோரினான்.

இவ்வாறு எல்லாளன் பௌத்தத்தை மதித்தும் காத்தும் வந்தபோதிலும் சிங்கள பௌத்தனே இலங்கையை ஆளவேண்டும் என்ற இனவெறியும் மத வெறியும் கொண்டிருந்த ரோகணப் பகுதி இளவரசனான துட்டகைமுனு தன் தாயார் விகாரமாதேவியின் அறிவுரையையும் உதவியையும் பெற்று எல்லாளனுக்கெதிராகப் போர் தொடுப்பதற்காகப் பௌத்த நெறியை முன் நிறுத்தி, படை திரட்டும் நடவடிக்கைகளில் இறங்கினான்.

எல்லாளனுடன் போர்தொடுக்க வேண்டாம் எனத் தடுத்த தன்தந்தை காகவனதீசனுக்குப் பெண்கள் அணியும் ஆடைகளைப் பரிசாக அனுப்பி கோழையென அவனைக் கிண்டல் செய்தான். அதனாற் சீற்றமுற்ற றோகணவின் அரசனான காகவனதீசனுக்கு அஞ்சி துட்டகைமுனு மலைநாட்டுக்கு ஓடினான். பின்னர் யானைக்காகத் தன் தம்பியுடன் கடும் போர் புரிந்தான். இவ்வாறு பல கூடாத (துஷ்டச்) செயல்களைச் செய்ததால் துஷ்டகெமுனு என அழைக்கப்பட்டான்.

எல்லாளனை நேர்மையான போரிலே வெற்றிகொள்ள முடியாது என்பதை நன்கறிந்த துட்டகைமுனு தன் தந்தை இறந்ததும், தயாரினதும், பௌத்த பிக்குமாரினதும் அறிவுரைகளையும் உதவிகளையும் பெற்று,

பௌத்த நெறியைக் காப்பதற்கான போர் என்று கூறிக்கொண்டு எல்லாளன் மீது போர் தொடுத்தான். கடுமையாக மோதிய எல்லாளனின் படையைச் சமாளிக்க முடியாத நிலையிற் போர் நடைமுறைகளுக்கு மாறான வகையிலே தன் தாயைப் போர்க்களத்தில் முன்நிறுத்திப் பல சூழ்ச்சிகளைக் கையாண்டே எல்லாளனின் போர்த்தளபதிகளைத் துட்டகைமுனுவால் வெற்றிகொள்ள முடிந்தது. ஓராண்டுக்கு மேலாக நடைபெற்றபோரில் இறுதியில் துட்டகைமுனு முதியவனான எல்லாளனைத் தனிப் போருக்கழைத்து, போர்முறைக்கு மாறாக எல்லாளனின் யானையைத் தாக்கி அவனைக் கீழே வீழ்த்திக் கொன்றான்.

எல்லாளனுக்கு உதவியாக மாதோட்டத்தினூடாக 60000 படையினருடன் எல்லாளனுக்கு மருமகனான பாலுகன் வந்துசேருவதற்குள் போர் முடிவுற்றது. ஆயினும் பாலுகன் திரும்பிச் செல்லாது துட்டகைமுனுவுடன் கடும் போர் புரிந்தான். துட்டகைமுனுவுடன் நேருக்குநேர் நின்று வீரப்போர் புரிந்த பாலுகனை வெல்லமுடியாத நிலையில், முறைகேடான வகையிற் பூசலன் என்பவன் துட்டகைமுனுவுக்குப் பின்னால் ஒளிந்திருந்து அம்பெய்து பாலுகனைக் கொன்றான்.

அனைத்து மக்களும் பாராட்டிப் போற்றும்படியாக இலங்கையை ஆட்சி செய்துவந்த தமிழ் மன்னன் எல்லாளனை முறையற்ற சூழ்ச்சிப் போரில் வென்ற தம்தவறை மறைப்பதற்காகவே, துட்டகைமுனுவும் பௌத்த பிக்குமாரும், ''இது ஆட்சியைப் பெறுவதற்கான போரல்ல பௌத்த நெறியை மீட்பதற்கான போர்'' என்ற முழக்கத்தை முன்வைத்தனர்.

அதனோடு அனுராதபுரத்தின் தெற்கு வாயிலில் எல்லாளனுக்கு ஒரு நினைவிடத்தை அமைத்த துட்டகைமுனு அவ்வழியாற் செல்பவர்கள் அந் நினைவிடத்துக்கு மரியாதை செய்யவேண்டும் என்றும் கட்டளையிட்டான்.

பயிற்சி:-

1. எல்லாள மாமன்னன் இலங்கையை எந்த ஆண்டிலிருந்து எந்த ஆண்டு வரை ஆட்சி செய்தான்?
2. துட்டகைமுனுவின் படைத்தலைவர்களில் ஒருவனான பூசலன் போர்க்களத்தில் துட்டகைமுனுவுக்குப் பின்னால் ஒளிந்து நின்று யாரைக் கொன்றான்?
3. தமிழீழத்தில் எல்லாளனாற் கட்டப்பட்டதாக ஆங்கில வரலாற்று நூலாசிரியர் பாக்கர் குறிப்பிடும் குளங்கள் எவை.?
4. எல்லாளனின் படையினருடனான போரின்போது துட்டகைமுனுவின் படைகள் மேற்கொண்ட முறைகேடான நடவடிக்கைகள் மூன்று தருக?
5. எல்லாளனுக்கான நினைவிடத்தைத் துட்டகைமுனு எந்த இடத்திலே கட்டுவித்தான்?

# இலங்கை தென்னிந்திய அரசியல் உறவு

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே இலங்கைக்கும் தென்னிந்தியாவுக்குமிடையே அரசியல், வணிக, பண்பாட்டு உறவுகள் இருந்து வந்துள்ளன. இவற்றில் அரசியல் உறவென்பது குடியேற்றம், திருமணம், படையெடுப்பு, படையுதவி, போர்க் கைதிகளைச் சிறைப்பிடித்தல் என்பவற்றைக் குறிக்கும். இலங்கையின் வணிகம், பண்பாடு என்பன தென்னிந்தியாவுடன் தொடர்பு கொண்டு வளர்ந்துவந்தாலும், தொடக்க காலத்து அரசியல் உறவு தமிழ்நாட்டுடன் கொண்டிருந்ததற்கே சான்றுகள் உள்ளன. இதற்கு, தமிழ்நாடு இலங்கைக்கு மிக அண்மையில் அமைந்திருப்பதும் இனம், இறை நெறி, மொழி, பண்பாடு என்பவற்றால் இலங்கைத் தமிழர் தமிழ்நாட்டுடன் ஒற்றுமை கொண்டிருந்தமையும் கரணிய (காரண)ங்களாகும்.

இலங்கையின் அரசியல் வரலாற்றை, பௌத்தநெறி வரலாற்றை எடுத்துக் கூறும் பாளி இலக்கியங்கள் கூறுகின்றன. இவை பல கட்டுக்கதைகளையும், ஐதீகங்களையும் கொண்டுள்ளன என்பதை இலங்கையின் முதற் குடிகள் என்ற இயலிற் கற்றிருப்பீர்கள். பாளி இலக்கியங்களில் ஒன்றான மகாவம்சம், கி. மு. 6ஆம் நூற்றாண்டில் வடஇந்தியாவிலிருந்து வந்து இலங்கையிற் குடியேறிய விஜயனோடு ஒரு அரசு, ஒரு தலைநகர், ஒரு மரபு ஆட்சி தோன்றியதாகக் கூறுகின்றது. ஆனால், கி. மு. 3ஆம் நூற்றாண்டுக்குரிய உண்மைத்தன்மையுள்ள பிராமிச் சாசனங்கள், இலங்கையில் பல்வேறு பகுதிகளிற் பல்வேறு சிற்றரசுகளைப் பல்வேறு அரச மரபினர் ஆட்சி புரிந்ததாகக் கூறுகின்றன. இச்சிற்றரசுகள் தென்னிலங்கையிலும் வவுனியா, கந்தரோடை, பெரிய புளியங்குளம், நாச்சியார்மலை, அம்பாறை, பூநகரி போன்ற இடங்களிலும் இருந்துள்ளன. இவற்றின் தலைவர்கள் ஆய், வேள், பெருமகன் போன்ற பட்டப் பெயர்களைக் கொண்டிருந்தனர். இப்பெயர்கள் சங்க இலக்கியங்களில் வரும் பெயர்களையொத்துள்ளன. அதனுடன், சங்ககாலத் தமிழகத்தை ஆட்சி புரிந்த சோழ பாண்டிய மரபுகளை நினைவுபடுத்தும் குலப் பெயர்கள், இலங்கையிற் கிடைத்த பல பிராமிக் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றன. இப்பெயர்களைத் தமிழக அரச மரபுகளோடு இருந்த தொடர்பால் இங்கு வாழ்ந்த தமிழர்கள் தமக்குச் சூட்டிக்கொண்டார்கள் எனலாம்; எனவே இலங்கையின் தொடக்க காலச் சிற்றரசுகள் தமிழகந் தொடர்பாக ஏற்பட்டதெனக் கூறலாம்.

## தமிழர் படையெடுப்புக்கள்:-

பண்டைக் காலந்தொட்டு இலங்கையிலே தமிழ் மன்னர்களும், சிங்கள மன்னர்களும் மாறிமாறி ஆட்சி புரிந்து வந்துள்ளனர். தென்னிந்தியா

விலிருந்து படையெடுத்து வந்த தமிழர்கள் இலங்கை அரசைக் கைப் பற்றி ஆட்சி புரிந்தார்கள் என்று மகாவம்சம் கூறுகிறது. ஆனால் எல்லாத் தமிழ் மன்னர்களது ஆட்சியும் அவ்வாறுதான் ஏற்பட்டதெனக் கூறமுடி யாது. எல்லாளனுக்கு முன் அனுராதபுரத்தைக் கைப்பற்றி நீதிவழுவாது 22 ஆண்டுகள் சிறப்புற ஆட்சி நடத்திய சேனன், குத்திகன் ஆகியோரை தமிழ்நாட்டுக்கும் இலங்கைக்குமிடையே குதிரை வாணிகம் நடத்திய வணி கர்கள் என மகாவம்சம் கூறுகிறது. ஆயினும், இவர்களது ஆட்சியில் ஏற் பட்ட பொருண்மிய (பொருளாதார) வளர்ச்சி பற்றியோ கலைபண்பாட் டின் நிலைபற்றியோ இந்நூலில் எதுவும் கூறப்படவில்லை.

இத் தமிழ்மன்னர்களையடுத்து ஆட்சி நடத்திய சிங்கள மன்னன் அசேல னைப் போரில் வென்று தமிழ் மன்னனான எல்லாளன், 44 ஆண்டுகள் அனுராதபுரத்திலிருந்து தன் நல்லாட்சியை நடத்தினான். இதனால் மக்க ளின் நன்மதிப்பையும் பெற்றான். இவன் ஆட்சி பற்றி பாளி இலக்கியங்கள் கூறும் கதைகள் மனுநீதிகண்ட சோழனின் கதையை நினைவு படுத்துகின்றன.

சேனன், குத்திகன், எல்லாளன் ஆகியோர் தமிழகத்திலிருந்து படை யெடுத்து வந்து ஆட்சி செய்ததாக மகாவம்சம் கூறினாலும் அவர்கள் இலங் கையின் வடபகுதியை ஆண்டு வந்தவர்களாக இருக்கவேண்டும் என தற் கால வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

கி. மு. முதலாம் நூற்றாண்டில் சிங்கள மன்னன் வட்டகாமினி ஆட்சி செய்த காலத்தில் (கி. மு. 104 இல்) பாண்டிய நாட்டைச் சேர்ந்த ஏழு தமிழர்கள் அவனுக்கு எதிராகப் படையெடுத்தனர். இப்படையெடுப்பில் வட்டகாமினியின் அரசு கைப்பற்றப்பட்டு புலகதன், பாகியா, பணயமாறன், பழையமாறன், தாதிகன் ஆகிய ஐந்து தமிழர்கள் மாறிமாறி 14 ஆண்டு 7 மாதம் ஆட்சி செய்தனர். இவ்வாறு முதல் 250 ஆண்டுகள் அனுராத புரத்தில் ஆட்சி புரிந்த 22 மன்னர்களுள் 10 தமிழ் மன்னர்கள் 82 ஆண்டு களுக்குமேல் ஆட்சி புரிந்தனர்.

வரலாற்றுத் தொடக்க காலத்திலேயே அனுராதபுர அரசிலே தமிழரின் செல்வாக்குப் பெருகியதால், ஆட்சியுரிமையை இழந்த சிங்கள மன்னர்கள் தமிழ்நாட்டுக்குச் சென்று தமிழரின் படையுதவி பெற்றுத் தம் ஆட்சியை மீண்டும் கைப்பற்றும் நிலை கி. பி. 1 ஆம் நூற்றாண்டிலிருந்து ஏற்பட்டது. அவ்வாறு தமிழகத்திலே படையுதவி பெற்ற சிங்கள மன்னர்களுள் அபய நாகன், மொகல்லாவன், அக்கிரபோதி, தடாதீசன் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்கள் அனுராதபுரத்தைக் கைப்பற்றி ஆட்சியைப் பெறத் தமிழ்ப் படை வீரர்களே பெரிதுங் காலாக இருந்தனர்.

இத்தகைய காலப் பகுதியிற்றான் குறிப்பிடத்தக்க இரு தமிழர் படை யெடுப்புகள் இலங்கைமீது மேற்கொள்ளப்பட்டன. இவற்றுள் ஒரு படை

யெடுப்பு வங்கநாகசேதீசன் காலத்தில் [கி.பி. 110 - 112 இல்] நடைபெற்றது. சங்ககால மன்னர்களிலே தலை சிறந்தவனாகக் கருதப்படும் கரிகாற் சோழன் இலங்கைமீது படையெடுத்து 12,000 சிங்களவர்களைச் சிறைப் பிடித்துக் காவேரிக்கு அணை கட்டுவித்தான் என இராஜாவளி என்ற சிங்கள நூல் கூறுகிறது. இரண்டாவது படையெடுப்பு மித்தசேனன் ஆட்சிக் காலத்தில் [கி.பி. 435 இல்] இடம்பெற்றது. பாண்டிய அரசகுலத்தைச் சேர்ந்த பண்டு என்பவன் தலைமையிலே நடைபெற்ற படையெடுப்பில் அனுராதபுர அரசு தமிழர்களாற் கைப்பற்றப்பட்டு 27 ஆண்டுகள் ஆட்சி செய்யப்பட்டது. 27 ஆண்டுகள் ஆட்சி செய்தவர்கள் பண்டு கி. பி. 436-441 அவன் மகன் புரிந்தன் 441 - 444, அவன் தம்பி குட்ட பரிந்த 444 - 450, திரிதன், தாடிகன் 460 - 463, பீடியன் 463 என்போராவர். இவர்களது ஆட்சி தென்னிலங்கைவரை பரவியிருந்ததை அறகம என்ற இடத்திற் கிடைத்த பரிந்தனின் கல்வெட்டும், கதிர்காமத்திற் கிடைத்த தாடிகனின் கல்வெட்டும் உறுதிப்படுத்துகின்றன.

தமிழ்நாட்டிலே கி. பி. 6 ஆம் நூற்றாண்டிலே ஏற்பட்ட பல்லவர் ஆட்சி, இலங்கை – தமிழ்நாட்டு அரசியல் உறவிலும் இலங்கைத் தமிழர் வரலாற்றிலும் பல மாற்றங்களை ஏற்படுத்தின. பல்லவர் ஆட்சிக்கு முன்வரை தமிழ் நாட்டிலிருந்து தனிப்பட்ட படைவீரர்களின் படையுதவியை நாடிய சிங்கள மன்னர்கள், பல்லவர் ஆட்சியில் தமிழ்நாட்டு அரச மரபினரின் உதவியை நாடினர். அதனோடு, தமிழ்நாட்டில் எழுச்சி பெறும் அரசுக்கு எதிராகப் போரிடும் அரச குலத்தினருக்கு இலங்கைச் சிங்கள மன்னர்கள் ஒத்துழைப்பு வழங்கினர். இதனால் பல்லவர் ஆட்சிக் காலத்திலிருந்து, இலங்கை-தமிழ்நாட்டு அரசியல் உறவானது அரசுமட்ட உறவானது. இக்காலத்தில் ஏற்பட்ட இந்து இறைநெறி இயக்கத்தால் தமிழ்நாட்டில் பௌத்த இறைநெறி வீழ்ச்சியடைந்து, இந்து இறைநெறி மறுமலர்ச்சியடைந்தது. இதன் தாக்கம் சமகாலத்தில் இலங்கையிலும் ஏற்பட்டது. இதனால், இலங்கையில் இந்து - பௌத்தம் என்ற இறை நெறி வேறுபாடு தோன்றி, தமிழர் இறைநெறி, இனம், மொழி, பண்பாடு என்பவற்றிலே தமது தனித்தன்மையை நிலைநாட்டத் தொடங்கினர். அதனுடன், தமிழ்நாட்டிலிருந்து மேற்கொள்ளப்பட்ட படையெடுப்புகளுக்கு இலங்கையிலுள்ள தமிழ்ப்பகுதிகள் ஒத்துழைப்பு வழங்கும் தளங்களாக மாறின. இவ்வாறான காலப்பகுதியிற்றான் அனுராதபுரத்துக்கு வடக்கில் உள்ள தமிழர் பகுதியில் இருந்து சிங்கள மன்னர்களுக்கு எதிராகக் கி. பி. 7 ஆம், 8 ஆம், 9 ஆம் நூற்றாண்டுகளில் கிளர்ச்சிகள் படையெடுப்புகள் நடந்ததாகச் சூளவம்சம் கூறுகிறது.

நரசிம்மபல்லவன் காலத்தில் இலங்கையைச் சேர்ந்த ''மானா'' என்பவன் பல்லவ மன்னனிடத்தில் அடைக்கலம் புகுந்து தனது பெயரைப் பல்லவரைப் போன்று மானவர்மன் என மாற்றிக்கொண்டான். இவன் பல்லவ

மன்னர்களது போராட்டங்களிற் பங்கு கொண்டு பல்லவனின் மதிப்பைப் பெற்றதால் அதற்கு மாற்றீடாகப் பல்லவ மன்னன் தன் படையை இலங்கைக்கு அனுப்பி அனுராதபுர அரசை மானவர்மனுக்குப் பெற்றுக் கொடுத்தான். 9ஆம் நூற்றாண்டில் முதலாம் சேனன் அனுராதபுரத்தில் ஆட்சி செய்த காலத்தில் [கி. பி. 833 - 853] வட இலங்கையின்மீது பாண்டிய மன்னன் சிறீவல்லபன் தலைமையிற் படையெடுப்பு ஒன்று நடந்தது. இப் படையெடுப்பில் மாதோட்டத்திலிருந்த தமிழர்களும் இணைந்துகொண்டதாகச் சூளவம்சம் கூறுகின்றது. இப்படையெடுப்பினாலே தோல்வியடைந்த சிங்கள மன்னன் பாண்டியனின் வல்லாண்மையை ஏற்று ஆட்சி செய்ய வேண்டியேற்பட்டது.

10ஆம் நூற்றாண்டிலிருந்து இலங்கை - தமிழ்நாட்டு அரசியல் உறவும் மேலும் நெருக்கமடைந்தது. இக்காலத்திலிருந்து எழுச்சிபெற்ற சோழப் பேரரசுக்கெதிராகப் பாண்டியர்கள் போரிட்டனர். பாண்டியர்களுக்குச் சார்பாக இலங்கை மன்னன் படையனுப்பிவைத்ததால் பாண்டியரை வெற்றி கொண்ட சோழர்களின் பார்வை இலங்கைமீது திரும்பியது. அதுமட்டுமன்றி, முதலாம் பராந்தக சோழன் மதுரையைக் கைப்பற்றியபோது பாண்டிய மன்னன் இராஜசிம்மன் தன் முடியையும் செல்வங்களையும் இலங்கையில் அடைக்கலமாக வைத்திருந்தான். மதுரையைக் கைப்பற்றிய சோழ மன்னன் பாண்டிய முடியையும் கைப்பற்றிப் பாண்டிய நாட்டை ஆளவிரும்பினான். சோழர் தூதனுப்பிக் கேட்டும் பாண்டிய முடியை இலங்கைச் சிங்கள மன்னன் கொடுக்க மறுத்ததால், அவர்கள் இலங்கை மீது படையெடுத்து வட இலங்கையைக் கைப்பற்றினர்.

பராந்தக சோழனின் மறைவுக்குப்பின் இரண்டாம் பராந்தக சோழன் (சுந்தரசோழன்) காலத்தில் சிங்கள மன்னன் 4ஆம் மகிந்தன் சோழருக்கு எதிராக, பாண்டியருக்கு உதவியாகப் படையனுப்பினான். இதனாற் சீற்ற முற்ற இரண்டாம் பராந்தகன் அனுராதபுரத்தைக் கைப்பற்றப் படையனுப்பி வெற்றிகொண்டான். அதன்பின் ஆட்சிக்கு வந்த முதலாம் இராஜராஜ சோழன் இலங்கை மீது மேற்கொண்ட படையெடுப்பில், 1300 ஆண்டுகாலம் தலைநகராக இருந்த அனுராதபுரம் வீழ்ச்சியடைந்து சோழரின் நேரடி ஆட்சியின் கீழ் வந்தது. அதன்பின் இராஜராஜ சோழனின் மகன் இராஜேந்திர சோழன் படையெடுப்பில் முழு இலங்கையும் சோழர் ஆட்சியின்கீழ் வந்தது.

சோழர் ஆட்சியில் ஏறத்தாழ 80 ஆண்டுகாலம் (கி. பி. 992-1071) இலங்கை சோழரின் ஆட்சியுடன் இணைக்கப்பட்டது. புதிய தலைநகராகப் பொலநறுவ மாற்றப்பட்டு இலங்கை மும்முடிச் சோழ மண்டலம் என்ற பெயரைப் பெற்றது.

பயிற்சி:-

1. இலங்கையின் பண்டைய தமிழ்ச் சிற்றரசர்கள் தமக்குச் சூடிக் கொண்ட பட்டப்பெயர்கள் 3 தருக?

2. இலங்கையில் பண்டைய சிற்றரசுகள் இருந்த இடங்கள் 3 தருக?

3. தமிழ்மன்னர்களான சேனன், குத்திகன் எவ்வளவு காலம் இலங்கையை ஆண்டனர்.

4. கி. பி. முதலாம் நூற்றாண்டில் 5 தமிழர்கள் தொடர்ச்சியாக எவ்வளவு காலம் இலங்கையை ஆண்டனர்?

5. முதல் 250 ஆண்டு கால அனுராதபுர ஆட்சியில் எத்தனை தமிழ் மன்னர்கள் எத்தனை ஆண்டுகள் ஆட்சி செய்தனர்?

6. கி. பி. முதலாம் நூற்றாண்டின் பின் தமிழகம் சென்று படையுதவி பெற்றுவந்து தமது ஆட்சியை மீளப்பெற்ற சிங்கள மன்னர்களின் பெயர்கள் 4 தருக?

7. சோழர்கள் இலங்கைமீது போர் தொடுக்கத் தூண்டுகோலாக இருந்த நிகழ்வுகள் இரண்டைக் கூறுக?

8. சோழர்கள் இலங்கையில் எந்த இடத்தைத் தமது ஆட்சிமையமாகக் கொண்டிருந்தனர்?

# அட்டைப் படத்துக்கு எழிலூட்டுபவை

★ சங்கிலிய மன்னனும் நந்திக்கொடியும்

★ யாழ்ப்பாணத் தமிழரசின் காசு [சேது நாணயம்]

★ திருக்கோணேசர் மலையும் கோயிலும்

★ ஈமத்தாழி பொம்பரிப்பு [புத்தளம்]

★ கல்வட்டம மாமடுவ [வவுனியா]

★ கல்மேசை கதிரவெளி [மட்டக்களப்பு]

சிங்கள அரசின் பொருண்மியத் தடையினால் காகிதாதிகள், அச்சுப் பொருள்களுக்கு நிலவுகின்ற பெருந் தட்டுப்பாடுகளுக்கிடையில் வெளியிடப் பட்டிருக்கும் இந்நூலை நீண்டகாலம் பேணிக்காத்துப் பயன்படுத்துமாறு மாணவச் செல்வங்களை வேண்டுகின்றோம்,

கன்னி நிலம் பதிப்பகம் பாலிநகர், வவுனிக்குளம்.